௧௦௬ நிரைநேர் நேரது நீண்மதி யதற்கு
வருநாண் மகசிர மலிபுக ழாகும். (௧௦)

௧௦௭ நிரையசை மூன்று நிலக்கண மதற்குத்
தருநாள் கேட்டை திருமிகத் தருமே. (௧௧)

௧௦௮ நீர்க்கண நேர்நிரை நிரைநாள் சதயம்
பார்க்கதிர்ப் பெருக்கம் பார்கரு மென்ப. (௧௨)

௧௦௯ கண்ணிய நேர்நிரை நேர்வரிற் கடுங்கதிர்
நண்ணிய நோய்தரு நாள்புனர் பூசம
நிரைநிரை நேர்தாம் வரின வானம்
பெருகிய கேடது ‡தருநா ளோணம். (௧௩)

௧௧௦ நெருப்பின் கணநிரை நேர்நிரை கார்த்திகை
விருப்புறு நாள திக்கண் செய்யும். (௧௪)

௧௧௧. காட்டிய நேர்நேர் நிரைவரிற் காற்றது
நாட்டுறை போக்குநாள் சோதி யாகும. (௧௫)

௧௧௨ நிற்பன தீக்கண நான்கவை நீக்கி
நற்கண நான்கவை நாட்டினர் கொளலே. (௧௬)

௧௧௩ அவைதாம்;—
நீரே நிலனே வானே நீண்மதி
சீரிய மானன் செந்தீக் கெறுகதிர்
காற்றெனக் கிளர்ந்த கூற்றன வென்ப. (௧௭)

௧௧௪ நேர்முத லாகி நிரையிணை பின்வரி
னீர்க்கண மென்ப நெறியுணர்ந் தோரே. (௧௮)

௧௧௫ நிரைமூன் றியைநதது நிலனெனத் தகுமே. (௧௯)

௧௧௬ மூன்றுநிரை யிணைந்து நேரிறு மூவசை
யந்தர கணமென் $றறிதல் வேண்டும். (௨௦)

௧௧௭ முதனிரை யாகி யிணைநேர் வழிவரி
னதுமதிக் கணமென் ¶றறிந்தனர் கொளலே. (௨௧)

---

‡ நாளோண மென்ப பி-ம்.
$ றறைதல் பி-ம்.
¶ றறைந்தனர் பி-ம்.

௧௨௬ எல்லாக் கணமு நாலை மிலவெனிற்
பொல்லாங்கு தருமெனப் புகல வேண்டும்.:

இந்திரகாளியார். (௩௦)

௧௨௭ மங்கல மமைந்த சொல்லொடு பொருந்திய
வீரசை நான்கினு ணோரி ரெழுத்து
நிரையீற் றியற்சீர் முதற்க ணிற்பினும்
வரையார் மூவகை வாராக் காலே. (௩௧)

௧௨௮ ஈரசை முதலா நேரீ ரெழுத்து
நிரையீற்று மங்கலம் புணர்ந்தனர் கொளலே. (௩௨)

௧௨௯ நிரைநிரை கொற்றவை நேர்நிரை ராகுதன். (௩௩)

௧௩௦ அவைதாம் :—
மிகுதரு திருவும் புகழுஞ் செய்யும்:

சேந்தம்பூதனார். (௩௪)

௧௩௧ ஓரசைச் சீரு நாலசைச் சீரு
மீரசைச் சீரு ணோரிறு சீரு
மங்கலம் புணரினு மங்குதல செய்யும்:

கோவூர்க்கிழார். (௩௫)

## உ.—மங்கலச் சொல்.

௧௩௨ பொன்பூத் திருமணி புனலா ரணங்கடல்
செங்கதிர் திகிரி தேர்பரி யெழுத்தே
மாநிலங் கங்கை மலைபுக ழமுதங்
கார்புய லுலகங் களிறே யருந்ததி
பார்மதி நாள்சீர் ஞெண்டெ னென்ன
வெண்ணிய சொல்லே யவையல பிறவுங்
கண்ணிய மங்கலச் சொல்லெனக் காட்டினர். (௧)

௧௩௩ சொல்லெனப் படுபவை சொல்லுங் காலைத்
திருப்பொன் பூமி புனன்மணி கடல்யா
றெழுத்தமு தெழின்மழை பசுங்கதிர் செஞ்சுடர்
நாள்சொன் ஞெண்டு நாட்டிய பரிமலை
கருட னருந்ததி மற்றிவை யென்ப
நிலைபெறு மங்கல நெறிநிற் பனவே:

பொய்கையார். (௨)

## ங—பெயர்ப் பொருத்தம்.

கசங எண்வகைப் பெயரு நண்ணுதல் செப்பிற்
குலங்குடி கோத்திர நலம்பெறு குணமே
மனமே யாணை மன்னிய சிறப்பே
யியற்பெய ரென்றிவை நயமுறு மியன்ற
சிறப்பியற் பெயரெனு மிருதிறத் திற்கு
மயக்கற மொழிபுத லெடுக்குஞ் சொல்லுடன்
பொருத்தங் கொள்வர் கருத்துணர்ந் தோரே. (க)

கசச பார்ப்பா ரரசர் வணிகர்வே ளாளரெனப்
பாற்படு நாற்பெயர் குலப்பெய ராகும். (உ)

கசரு குடிப்பெய ராவன கூறுங் காலைச்
சேரன் சோழன் பாண்டிய னென்றிப்
போல்வன பிறவும் பொருந்தக் கொளலே. (ங)

கசசு கோத்திரப் பெயரே கூறுங் காலைத்
தாதைகுடிப் பெயரைத் தந்ததைத் தியற்றல். (ச)

கசஎ குணப்பெய ரேனைப் புலவோர் கொடுப்பத்
தணப்பில வாகித் தழுவும் பெயரே. (ரு)

கசஅ மனப்பெய ராவன தனக்குத் தானே
யெனக்கிது வேண்டுமென் றெய்தும் பெயரே. (சு)

கசகூ ஆணைப் பெயரே வலியோ ரன்றரப்
பேணி யுலகம் பேசும் பெயரே. (எ)

கரு0 சிறப்புப் பெயரே தெரியுங் காலைச்
சிறப்புடை வேந்தன் கொடுக்கும் பெயரே. (அ)

கருக சாதியி னுள்ளோர் தமக்குத் தாமே
நீதிகொள் சிறப்பியற் பெயர்கொளற் குரியர். (கூ)

கருஉ முடியுடை வேந்தன்முற் குலத்தோர்க் கல்லது
பட்டமும் பூவும் பூணு மாழியு
நட்டமி னலமலி சிறப்புப் பெயருங்
கொடாஅ ரெனமொழிப குலமொழிப் புலவர். (க0)

கருங வினைசெயன் மருங்கின்மிக் கோரும் பெறுப. (கக)

கருச தந்தை மகப்பெயர் முந்திய குலப்பெயர்
மனப்பெயர் கோத்திரங் குணப்பெய ராணை
யியற்பெயர் சிறப்புடைப் பெயரிரண் டாகுங்
கயக்கறு முதன்மொழிப பொருத்தங் கொளலே. (கஉ)

சொல்லியல் முற்றிற்று.

## இனவியல்.

கருரு வெள்ளை யகவ றுள்ளுகலி வஞ்சி
யென்னு நாற்பா விவற்றுட னியன்மருட்
பாழிசை துறைவிருத் தங்கமென் றிவற்றிற்
சூழ்வகை யினமபல சொல்லுத லினவியல். (க)

கருசு ஒன்றே யாகியு மொன்றுபல வாகியும
பலவொன் றாகியும பாற்படு மினமே. (உ)

கருஎ அவற்றுள் ;—
ஒன்றே யாகிய வினமெனப் பட்டன
உலாவாற் றுப்படை மகைமடன் முதலாயின. (ங)

கருஅ ஒன்றுபல வாகிய வினமந் தாதி
கோவை காபபிய மாதியாக கூறுவன. (ச)

கருகூ பலவொன் றாகிய வினமெனப் பட்டன
கலித்தொகை குறுந்தொகை * நெடுந்தொகை முதலாயின. ()

கசூ0 பலவொன் றாகிய வினமெனப் பட்டன
கலம்பக முமமணிக் கோவைமுத லாயின. (சு)

### க.—பாப்பொருத்தம்.

(வெண்பா.)

கசூக அந்தணர் சாதி யாகிய வெள்ளைக்குச்
சந்திரன் றன்னொடு தகைமிகு வியாழன்
கடவுளர் கார்த்திகை முதலேழ் நாளா
மீனங் கடகந் தேளே யோரை
சந்தனம் விரைபூ வந்தண் மல்லிகை

* நெடுந்தொகை என்பது அகநானூறு.

வெண்மதி நிறனே வண்ண நிலனே
முல்லை யென்னச் சொல்லினர் புலவர். (௧)

(ஆசிரியப்பா.)

௧௬௨. காவலர் சாதி யாகிய வகவற்
காகிய கடவுளர் செங்கதிர் செவ்வாய்
நாளே மகமுத லுளே பூராடுஞ்
சிங்கந் தனுவே மேட மோரை
செஞ்சந் தனம்விரை கழுநீர் பூவே
செந்நிற நிறனே நன்னிலங் குறிஞ்சி. (௨)

(கலிப்பா)

௧௬௩. நெடுநிலைக் கலியே வணிகர் சாதி
கடவுளர் சனிபுகன் கருதிய நாளே
யநுடமுத லாறே யோரை துலாங்குட
மிதுனஞ் சந்தனம் விரைபூர சண்பகம
பொன்னிற நிறனே நன்னில நெய்தல். (௩)

(வஞ்சிப்பா.)

௧௬௪ எஞ்சிய வேளாண் சாதி வஞ்சி
நாளே யவிட்ட முதலேழ் நாளா
மிடபங் கன்னி மகர மோரை
சார்ந்த விரையே தண்ணறுங் கலவை
யேந்திய போதே யின்னறு நீல
நீல நிறனே நெடுநில மருதம். (௪)

௧௬௫ நால்வகைப் பாவிற்கு மேலோர் வகுத்த
வினங்களும் பெறுமென நினைந்தனர் கொளலே. (௫)

௧௬௬ நால்வகைப் பாவு நால்வகைக் குலத்தின்
பால்வகைப் படுமே முதலன விரண்டின்
புணர்ச்சி மருட்பாப் பொருந்தா வருணம். (௬)

௧௬௭ நாளு மோரையு நலத்தகு நிலனும்
விரையுஞ் சாதியு நிறனுங் குணனு
முறைபெறும் * பாநரர்க் குடைய வென்ப;
கல்லாடனார். (௭)

---

* 'பாநரன்குடைய' பி-ம்

கரு அ அந்தர் சாதிக் கந்தப் பாவே
தந்தனர் புலவர் தவிர்ந்தனர் வரையார். (அ)

கரு கூ வெள்ளையு மகவலு மவிருத்தமுங் கலியும்
வஞ்சியு மெஞ்சா மங்கல மொருந்தும். (கூ)

கள0 வெள்ளை யகவல் விருத்தங் கலியே
வஞ்சி யென்றிவை மங்கலப் பாவே;

அவிநயனார். (க0)

உ —பாவினம்.

களக மேதகு சாதகம் பிள்ளைப் பாட்டே
கோதில் வெந்தன் குடைமங் கலமே
யோதிய வொருபோ கம்மைந் தலம்பக
முலாவே சின்னப் பூவே பரணி
பழுதின் மடன்மற மலந்த மாலை
யிணைமணி மாலை யிரட்டைமணி மாலை
மும்மணி மாலை நான்மணி மாலை
கலம்பக மாலை மும்மணிக் கோவை
யருங்கலி யொலியே யானைத் தொழிலே
வருக்க மாலை நாம மாலை
திருக்கிளை யின்னிசை சிலம்பி கலியே
யெழிலம்புணை வாள்குடை தொழில்புணை வேல்கோ
லழிவி னுரிப்படை விருத்த
நாழிகைக் கவியே நவமணி மாலை
கைக்கிளை யிரிபிறப் பட்டமங் கலமே
யில்லற வெள்ளை யெழில்புனை தாரகை
சொல்லிய தாண்டகந் துகளறு பதிகஞ்
சீர்மெய்க் கீர்த்தி செருக்கள வழியே
யாற்றுப் படைவகை கண்படை துயிலெடை
விளக்கு நிலையே வெஞ்சினக் காநிலை
யெண்ணிய யாண்டே கண்ணிய பறைநிலை
யரும்பொரு ணிறுத்த வந்தா திததொகை
புறநிலை வாயுறை செவியறி வுறாஉவே

பாத மாதி பணைமுலை நயனங்
குற்றமி லுழத்தி குறத்திப் பாட்டே
யொருபா வொருபஃ திருபா விருபஃது
கோவை கணக்கே தொடர்நிலைப் பாட்டே
கடைநிலை கையறு நிலையெனக் கருதி
யிடனறி புலவ ரியம்பின ரினமே. (க)

க.—சாதகம்.

கஎ௨ தோற்றிய சாதகஞ் சாற்றுங் காலைப்
பற்றிய கலியுகத் துற்ற யாண்டிற்
றிருந்திய சகாத்தமு மாண்டும் பொருந்திய
ஞாயிறும் பக்கமு மேய வாரமு
மிராசியு மன்னுற மொழிதற் குரிய. (௨)

௨.—பிள்ளைப்பாட்டு.

கஎ௩ பிள்ளைப் பாட்டே தெள்ளிதிற் கிளப்பின்
மூன்று முதலா மூவே ழளவு
மான்ற திங்களி னறைகுவர் நிலையே. (௩)

கஎ௪ ஒன்றுமுத லையாண் டோதினும் வரையார்;

பொய்கையார். (௪)

கஎ௫ தோற்ற முதல்யாண் டிரெட் டளவு
மாற்றல் சான்ற வாண்பாற் குரிய. (௫)

கஎ௬ காப்புமுத லாகிய யாப்புவகை யெல்லாம்
பூப்பு நிகழ்வளவும் பெண்பாற் குரிய;

இந்திரகாளியார். (௬)

கஎஎ தொன்னிலை வேந்தர் சுடர்முடி சூடிய
பின்னர்ப் பெறுஅர் பிள்ளைப் பாட்டே;

பரணர். (எ)

கஎ௮ காப்பொடு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகவென் றன்முத
லம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்

நம்பிய மற்றவை * சுற்றத் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர். (அ)

கஎகூ தந்தை தாயே பாட்டன் பாட்டி
முந்துற வுரைத்தநம் முறைமை யென்ப. (கூ)

கஅ0 திருந்திய பெண்டக வாரின் விரும்பிய
பின்னர் மூன்று மன்னுபிக கென்றனர். (க0)

கஅக சிற்றில் சிறுதேர் சிறுபறை யொழித்து
மற்றவை மகளிர்க்கு வைப்ப தாகும. (கக)

கஅஉ சிற்றி லிழைத்தல சிறுசோ றுக்கல்
பொற்பமர் குழமகன் புனைமணி யூசல்
யாண்டு மாறதி லெழிற்கா மனென்பொடு
வேண்டுத லுனை விளம்பினர் புலவர். (கஉ)

கஅங திருமா லரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பரிதி வடுக
னெழுவகை மங்கையரிந்திரர் சாத்த
னிதியவ னீலி † பதினொரு மூவர்
திருமக ளுமைக டிகழ்மதி யென்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே. (கங)

கஅச காப்பின்முத லெடுக்குங் கடவு ளானே
பூக்கமழ் துழாய்முடி புனைந்தோ னாகும். (கச)

கஅரு அவன்முன்—
காவற் கிழவ னாக லானும்

---

* "சுற்றத் தளவுங் கவிக்கெல்லை யாயக்கொண்டு சொல்லுவரே." என்றார் நவநீதப்பாட்டிய லுடையாரும்.

† பதினொருமூவர்—பன்னிருவர் ஆதித்தர், பதினொருவர் உருத்திரர், எண்மர் வசுக்கள், இருவர் மருத்துவர் ஆகிய முப்பத்து மூவர். "நால்வே றியற்கைப் பதினொரு மூவரோடு" என்றார் திருமுருகாற்றுப்படையினும். "பதினொரு மூவரும் பங்கயத் தோனும் பகவதியு, நிதிமுத லோனும் பரிதி யுஞ் சாத்தனும்" என்பதனுன் நவநீதப்பாட்டியலாரும் பன்னிருவர்ஆதித் தரின் வேறாய்ப் பரிதியெனக் கூறுதல்காண்க.

பூவின் கிழத்தியைப் புணர்த லானு
முடியுங் கடகமு மொப்பூர் தாருங்
குழையு நாலுங் குருமணிப் பூணு
மணியுஞ் செம்ம லாக லானு
முன்னுற மொழிதற் குரிய னென்ப. (கரு)

கஅசு. விரிசடைக் கடவுளும் வேய்த்தோ ளொருவரு
மருளொடு காகக வென் றறையுங் காலைக்
கொலையுங் கொடுமையுங் கூறு ராகிய
பெயருஞ் சின்னமும் பிறவுந் தோன்றக்
கங்கை திங்கள் கடுக்கை மாலை
மங்கல மழுவொடு பலபக லென்றிவை
விளங்கக் கூறல் *விளம்பிய மரபே. (கசு)

கஅஎ ஒன்பது பதினென் றென்பது காப்பே.

பரணர். (கஎ)

கஅஅ. அகவல் விருத்தமுங் கட்டளை யொலியுங்
கலியின் விருத்தமுங் கவின்பெறு பாவே. (கஅ)

கஅகூ. பிள்ளைப் பாட்டே நெடுவெண் பாட்டெனத்
தெள்ளிதிற் செப்பும் புலவரு முளரே. (ககூ)

முதற்க ணெடுகரு மகவல் விருத்த
மெழுத்தின் பகுதி யெண்ணினர் கொளலே. (உ0)

ககூ0. நீணெறி யுவகை யாண்மக விற்கே
மைம்மூ வாண்டே †யவர்முதற் சாற்றல். (உக)

ககூக. பொங்குகதி ரிளம்பிறை புலியின் சிறுபறழ்
குஞ்சரக் குழவி கோளரிக் குருளை
யடலிள விடையே யாறிரண் டாண்டி
னிடைநிக ழுவமை யென்மனார் புலவர். (உஉ)

* 'வழங்கிய' பி-ம்.

† 'யாறுமுதற்' பி-ம்.

கக௬உ. பெண்மக விற்குப் பேசு மிடத்து
மானின் கன்று மயிலின் பிள்ளை
தேனி னின்பத் தெள்ளாத் தேறல்
கரும்பி னிளமுளை கல்லாக் கிள்ளை
யிளங்களிர் வல்லி யென்றிவை யெல்லாம்
பொய்வளை மகளிர்க் கெய்திய வுவமை. (உ௩)

கக௬௩. இளங்கதிர்த் திங்க ளெல்லார்க்கு முரித்தே: (உ௪)

பரணர்.

கக௬௪. அவைதாம்—
பிள்ளைப் பாடலிற் பிள்ளைப் பாட்டாய்ப்
பிறப்பே யோகை காப்பே வளர்ச்சி
யச்ச முறுத்த லுடன்செங் கீரை
தால்சப் பாணி முத்தம்வா ரானை
யம்புலி சிற்றில் குழமக ஞாசு
லென்றனர் பிறவுந் தொன்னெறி மரபிற்
றத்தந் தொழிற்குத் தகுவன புகற
லெத்திறத் தோர்க்கு முரிய வென்ப
கொச்சகக் கலியொடு நெடுவெண் பாட்டே. (உ௫)

கக௬௫ நெடுவெண் பாட்டின் முந்நான் கிறவாது
தொழிலொடு குறித்துத் தோன்றுஞ் செய்யு
ளொன்றுமூன் றைந்தே ழொன்பான் பதினொன்
றென்றிவை யிவற்றி *னிகந்தன விழுக்கே. (உ௬)

கக௬௬ பிறப்பே யோகை பேணுறு வளர்ச்சி
சிறைப்பட வச்ச முறுத்தலொடு நான்கு
மாரா யுங்கா லைந்துமுன் றிடையா
யோரே ழொருபொருட் குயர்ச்சியிழி பொன்றே:

இந்திரகாளியார். (உ௭)

௩.—வேந்தன்நடைமங்கலம்.

கக௬௭ முன்னீ ரடியிலுங் குடைத்தொழி லியம்பியும்
பின்னீ ரடியிற் றனிநிலை யிரட்டியுங்

* 'னிழிந்தன' பி-ம்.

கொற்றவற் *புகழ்ந்து குடையென முடிக்கு
நற்றிற நேரசைக் குடைவெண் பாட்டே. (உ௯)

௧௯௮ அதுவே ;—
குடைச்சொற் சிந்தடி யீற்றிலவைத நரக்
குடைர்சொல் லாதிக குளகத தடகுகி
யீற்றய லடியினு மீற்றினு மிறைவனை
போற்றிப் புகழ்ந்து புகறல் வேண்டுப

இந்திரகாளியார். (உ௯)

௧௯௯ ஒட்டிய குடைப்பொரு ளுரைக்கு நேரசை
கட்டளை யாகுதல் கடனென மொழிப. (௩0)

உ00 கட்டளை யென்பது கருதுங் காலை
யீற்றடி யொழிய வேனைமுன் றடியுட
பாற்படு மெழுத்தின் பகுதியொப் பதுவே. (௩௧)

உ0௧ இதற்கே யாமெழுத தெண்ணுங் காலைக
குற்றிய லுகரமுங் குற்றிய லிகரமு
மொற்று மொழிதருப் ருயிர்பெயயுங் கொளலே. (௩உ)

உ0உ மோனையு மெதுகையுந் தொடையென மொழிப. (௩௩)

உ0௩ சாற்றியமா ஞெருதத றனிமை மிருதிசயம்
போற்றுமுடன் பாடு புலனுண்மை-யேற்றுந
தலைப்பாடு பாதி தருகொடை பதது
நிலைப்பாடு நேரசையா நேர். (௩௪)

௪.—ஒருபோகு.

உ0௪ தன்மை முன்னிலை படர்க்கையுட் டன்மை
யொழித்திரு வகையு மொன்ருற் கடவுட்
பழிச்சு மொருபோ கிருமூன் றுறுப்பு
மமைந்தொருங் கியலு நயந்திகழ் கலியுள்
வண்ணகம் போதினு மெண்ணே போதினு
மோதிய வுறுப்பாற் பேர்புகன் றனரே. (௩௫)

* 'புணர்ந்து' பி—ம்.

உ0ரு. வரன்முறை பிறழ வுறுப்பு மயங்கி
மிக்குங் குறைந்தும் வருவது கொச்சக
வொருபோ காமென வுரைத்தனர் புலவர். (ருசு)

உ0சு. * கொச்சகத் தன்மையிற் கொச்சக மென்ப. (ருஎ)

உ0எ. தேவப் பிரணவ மெனும்வட மொழியைத்
தேவ பாணியெனத் திரித்துவழங் கினரே. (ருஅ)

உ0அ. தேவ பாணி தெரியுங் காலை
மாசறு தூயமுடி மலிந்த சென்னி
நீர்நிலை மளந்த நெடியோன் மேற்றே. (ருகூ)

உ0கூ. சுடர்கதிர்த் திங்கள் சூடி போற்றும்
படர்திரைப் பனிக்கடன் மாகடிந் தோற்கு
முரிய காலமு முளவென மொழிப. (சு0)

உக0. வேந்தன் வேண்டு நெறிசெய் தாலும்
வாய்ந்த மதியு மரபும் வாழ்த்தலும்
விதியென மொழிப மெய்ந்நெறிப் புலவர். (சுக)

## ரு—கலம்பகம்.

உகக. சொல்லிய கலம்பகஞ் சொல்லி லொருபோகு
முதற்கண் வெண்பாக் கலித்துறை புயமே

---

* 'கொச்சக மென்பது ஒப்பினாகியபெயர். ஓராடையுள் ஒருவழியடுக்கியது கொச்சகமெனப்படும்; அதுபோல, ஒரு செய்யுளுட் பல குறள் அடுக்கப்படுவது கொச்சக மெனப்படும்' (தொல், செய், கஉக) எனவும், 'இனிக் கொச்சக மென்பது ஒப்பினாகியபெயர்: என்னை? பலகோடுபட அடுக்கியுடுக்கும் உடையினைக்கொச்சகமென்ப; அதுபோலச் சிறியவும் பெரியவும் விராயடுக்கியுந் தம்முளொப்ப அடுக்கியுஞ் செய்யப்படும் பாட்டதனைக் கொச்சகமென்றாராகலினென்பது. இக்காலத்தார் அதனைப்பெண்டிர்க்குரிய உடையுறுப்பாக்கிக்கொய்சகமென்று சிதைத்தும்வழங்குப. (ஷெ, ஷெ கருக) எனவும் பேராசிரியரும், "பலகோடுபட அடுக்கியுடுக்கும்உடையினைக்கொச்சக மென்பவாகலின் அதுபோலச் சிறியவும் பெரியவும் விராயடுக்கியுந் தம்முளொப்ப அடுக்கியும் வருஞ் செய்யுளைக் கொச்சகமென்றார். இது ஒப்பினாகியபெயர். இக்காலத்து இது மகளிர்க்குரியதாய்க் கொய்சக மென்றுவழங்கிற்று" (ஷெ, ஷெ, ஷெ) என நச்சினார்க்கினியரும் கூறியவாற்றானறிந்துகொள்க. இனிக் கொச்சைத்தன்மையினென்பதூஉம் பாடம். "கொச்சக மாகும்" (தொல், செய், கஉக) என்பதனுரையில் "சிறப்பிலதனைக்கொச்சையென்று கூறும் வழக்கு நோக்கி இதனையும் சிறப்பின்மையாற் கொச்சகமென்றாரென்பாருமுளர்" என அந்நச்சினார்க்கினியரே கூறினார்.

யம்மனை யூசல் யமகங் களிமறஞ்
சித்துக் கால மதங்கி வண்டே
கொண்டன் மருள்சம் பிரதம் வெண்டுறை
தவசு வஞ்சித் துறையே யின்னிசை
புறமே யகவல் விருத்த மெனவருஞ்
செய்யுட் கலந்துட னெய்திய வந்த
மாதி யாக வருமென மொழிப. (௪௨)

௨௧௨. தேவர்க்கு முனிவர்க்குங் காவ லரசர்க்கு
நூறு தொண்ணூற் றைந்துதொண் ணூறே
ஒப்பி லெழுப தமைச்சிய லோர்க்குச்
செப்பிய வணிகர்க் கைம்பது முப்பது
வேளா ளர்க்கென விளம்பினர் செய்யுள்.

௯—உலா. (௯௯)

௨௧௩ முதனிலை பின்னெழு கிலையுலா வெண்கலி. (௪௪)

௨௧௪ பாட்டுடைத் தலைவ னுலாப்புற வியற்கையு
மொத்த காமத் திணையாள் வேட்கையுங்
கலியொலி தழுவிய வெள்ளடி யியலாற்
றிரிபின்றி * நடப்பது † கலிவெண் பாட்டே.

பொய்கையார். (௪௫)

௨௧௫ பேதை முதலா வெழுவகை மகளிர்கண்
டோங்கிய வகைநிலைக் குரியா னொருவனைக்

* 'நடப்பினது' பி-ம்.

† "இனி யொருபொருணுதலாது திரிந்து வருங் கலிவெண்பாட்டும் ஈண்டுக்கூறிய நெடுவெண்பாட்டோ டொருபுடை ஒப்புமையின் அக்கலி வெண்பாட்டாக இக்காலத்தார் கூறுகின்ற உலாச்செய்யுளும் புறப்புறக் கைக்கிளைப் பொருட்டாதல் ஒன்றெனமுடித்தல் என்னு முத்தியாற் கொள்க. அவ்வுலாச் செய்யுளிரண்டுறுப்பாயும் வெண்பாவிற் கெட்டும் வருதலிற் கலிவெண்பாவின் கூறும். இக்காலத்து அதனை ஒருறுப்பாகச் செய்து செப்பலோசையாகவுங் கூறுவர். அது துள்ளலோசைக்கே யேற்குமாறுணர்க" (தொல், செய், ௧௧௮) எனவும், "அது திருவுலாப்புறத்துள் 'வாமான வீசன் வரும்' (சேரமான் பெருமாணயனர் ஞானவுலா) எனமுடித்து மேல் வேறோருறுப்பாயவாறும் ஒழிந்தவுலாக்களுள் வஞ்சியுரிச்சீர் புகுந்த வாறும் அடிவரையறையின்மையும்" (ஷை, ஷை, ௧௫௧) எனவும் நச்சினார்க்கினியர் கூறுவர்.

காதல்செய் தலின்வருங் கலிவெண் பாட்டே. (சசு)

உகரு குடிநெறி மரபு கொளல்கொடை விடிய
னன்னீ ராட னல்லணி யணித
ரென்னக ரெதிர்கொள னன்னெடு வீதியின்
மதகளி றூர்தன் முதனிலை யாகும். (சஎ)

உகஎ ஆதி நிலையே குமார்கொள லென்றெடுத்
தோதிய புலவரு முளரென மொழிப. (சஅ)

உகஅ எழு நிலையு மியம்புங் காலை
பேதை பெதும்பை மங்கை மடந்தை
யரிவை தெரிவை பேரிளம் பெண்ணெனப்
பாற்படு மகளிர் பருவத் தாத
னேக்கி யுரைப்பது நுண்ணியோர் கடனே. (சகூ)

உககூ பேதைக் கியாண்டே யைந்துமுத லெட்டே. (நிO)

உஉO பெதும்பைக் கியாண்டே யொன்பதும் பத்தும். (நிக)

உஉக மங்கைக் கியாண்டே பதினொன்று முதலாத்
திரண்ட பதின்மூ ளைவுஞ் சாற்றும். (நிஉ)

உஉஉ மடந்தைக் கியாண்டே பதினான்கு முதலாத்
திடம்படு மொன்பதிற் றிரட்டி செப்பும். (நிங)

உஉங அரிவைக் கியாண்டே யறுநான் கென்ப. (நிச)

உஉச தெரிவைக் கியாண்டே யிருபத் தொன்பது. (நிரு)

உஉரு ஈரைந் திருநான் கிரட்டி கொண்டது
பேரிளம் பெண்டுக் கியல்பென மொழிப.

பொய்கையார். (நிசு)

உஉசு காட்டிய முறையே நாட்டிய வாண்பாற்
கெல்லையும் பெயரு மியல்புற வாய்ந்து
சொல்லிய தொன்னெறிப் புலவரு முளரே. (நிஎ)

உஉஎ பாலன் யாண்டே யேழென மொழிப. (நிஅ)

உஉஅ மீளி யாண்டே பத்திமை காறும். (நிகூ)

உஉகூ மறவோன் யாண்டே பதினான் காகும். (சுO)

உ௩0 திறலோன் யாண்டே பதினைந் தாகும். (௬௧)

உ௩௧ பதினா றெல்லை காளைக் கியாண்டே. (௬௨)

உ௩௨ அத்திற * மிறந்த முப்பதின் காறும்
விடலைக் காகு மிகினே முதுமகன்.

அவிநயனார் (௬௩)

உ௩௩ நீடிய நாற்பத் தெட்டின் அளவும்
மாடவர்க் குலாப்புற முரித்தென மொழிப. (௬௪)

உ௩௪ சிற்றில் பாவை கழங்கம் மனையே
பொற்புறு மூசல் பைங்கிளி யாழே
பைம்புன லாட்டே பொழில்விளை யாட்டே
நன்மது நுகர்ச்சி யென்னப் பிறவும்
மலரவர்க் குரிய வாகு மென்ப. (௬௫)

உ௩௫ வேந்தர் கடவுளர் விதிநூல் வழிபுணர்
மாந்தர் கலிவெண் பாவிற் குரியர். (௬௬)

உ௩௬ நாலு வருணமு மேவுத லுரிய
வுலாப்புறச் செய்யுளென் றுரைத்தனர் புலவர்.

அவிநயனார் (௬௭)

எ—சின்னப்பூ †

உ௩௭ மலையும் யாறு நாடு மூரும்
பரியுங் களிறுங் கொடியு முரசுந்
தாரும் பெயரு மெனத்தெரி பத்துஞ்
சொல்லு மெல்லையின் முதற்குறட் கண்ணே
சின்னத் தொழிலே மன்னனை வைத்துப்
பின்னர்க் குறளுட் பாட்டுடைத் தலைவ
னியற்பெயர் வைத்தவர்க் குரிமை தோன்றுஞ்

---

* 'மியன்ற' பி-ம்.

† "வழக்கொடு சிவணிய வகைமை யான" (தொல். புற. ௩௧) என்பத னுரையில் நச்சினார்க்கினியர் "சிவணியவகைமை' என்றதனானே முற்கூறிய வற்றோடே நாடும், ஊரும், மலையும் யாறும் படையுங் கொடியுங் குடையும் முரசும் நடைநவில்புரவியும் களிறுந் தேருந் தாரும் பிறவும் வருவனவெல் லாங் கொள்க. இவற்றுட் சிலவற்றை வரைந்துகொண்டு சின்னப்பூ என்று பெயரிட்டு இக்காலத்தார் கூறுமாறுணர்க" என்பர்.

செயல்பெற வைப்பது சின்ன மதுவே
யாதிப் பாவின தனினம் வருமே. (௬௮)

௨௩௮ மலையே யாறே நாடே யூரே
பறையே பரியே †களிறே தாரே
‡பெயரே கொடியே யென்றிவை தசாங்கம். (௬௯)

௨௩௯ பத்தே யேழே மூன்றே சின்னம். (௭0)

அ.—பரணி.

௨௪0 மயக்கறு கொச்சகத் தீரடி யியன்று
நயப்புறு தாழிசை யுறுப்பிற் பொதிந்து
வஞ்சி மலைந்த வுழிஞை முற்றித்
தும்பையிற் சென்ற தொடுகழன் *மன்னனை
வெம்புசின மாற்றான் றனைவெங் களத்திற்
குருதிப் போரா றுபெருகுஞ் செங்களத்
†தொருதனி யேத்தும் பரணியது பண்பே. (௭௧)

௨௪௧ தேவர் வாழ்த்தே கடைநிலை பாலை
மேவி யமருங் காளி கோயில்
கன்னியை யேத்த லலகை விநோதங்
கனநிலை நிமித்தம் பசியே யோகை
பெருந்தேவி பீட மழகுற விருக்க
வமர்நிலை நிமித்த மவள்பதம் பழிச்சா
மன்னவன் வாகை மலையு மளவு
மரபினி துரைத்தன் மறக்களங் காண்டல்
செருமிகு களத்திடை யடுகூழ் வார்த்தல்
பரவுத லின்ன வருவன பிறவுந்
தொடர்நிலை யாகச் சொல்லுதல் கடனே. (௭௨)

௨௪௨ யானை சாய்த்த வடுகளத் தல்ல
தியாவரும் பெறாஅர் பரணிப் பாட்டே. (௭௩)

---

† களிறெழுத்துப் படைகோட லுமுண்டு. அவ்வாறு திருவாசகத்துள்ள திருத்தசாங்கத்துக் காண்க.

‡ பெயரை ஆணை என்பாருமுளர். (இலக்கணவிளக்கப்பாட்டியல்-௨௨)

* 'மன்னன்' எனவும், † 'தொருவற்போற்றும்' எனவும் பி-ம்.

உசங ஏழ்தலைப்பெய்த நூறுடை யிபமே
யடுகளத் தட்டாற் பாடுதல் கடனே. (எச)

**க௯.—மடல்.**

உசச அறம்பொருள்*வீடு திறம்பெறி தழித்துச்
சிறந்த வேட்கை செவ்விதிற் பாராஅய்ப்
பாட்டுடைத் தலைமக னியற்பெயர்க் கெதுகை
நாட்டிய வெண்கலிப் பாவ தாகித்
தனிச்சொல் லொரீஇத் தனியிடத் தொருத்தியைக்
கண்டபி னந்த வொண்டொடி யேத்தன்
மற்றவன் வடிவை யுற்ற கிழியெழுதிக்
காமங் கவற்றக் கரும்பனை படன்மா
வேறுவ ராடவ ரென்றனர் புலவர். (எரு)

உசரு படன்மாப் பெண்டி ரேறு ரேறுவர்
கடவுளர் தலைவ ராய்வருங் காலை. (எசு)

உசசு கடவுளர் மேற்றே காரிகை மடலே. (எஎ)

உசஎ எந்தை யுடைப்பெயர்க் கெதுகை சாற்றி
யந்தமி லின்பம் பொருளா வேத்திப்
பொருளு மறனும் வீடும் பழித்து
மடன்மா வேறுதன் மாதர்க் குரித்தே.* (எஅ)

**க௦.—மறம்.**

உசஅ பெருநில வேந்தன் மகட்பால் வேண்டி
யொருபெருந் தூத னுரைத்தமொழி கேட்டுக்
குறுநில மறவன் †வெஞ்சினந் திருகி
மாற்றமிக வுரைப்பது மறமென மொழிப. (எகூ)

**கக.—பல்சந்தமாலை.**

உசகூ சொன்ன கலம்பக வுறுப்புவகை நீக்கி
மன்னிய பத்து முதனூ றளவா

---

* இவ்வாறு வந்தன மங்கையர்கோன் அருளிச் செய்த பெரியதிருமடல் சிறியதிருமடல் என்பன.

† 'வெஞ்சின வஞ்சின' பி-ம்.

வந்த மரபின் வருஉஞ்செய்யுண் முதலா
வந்தது பல்சந்த மாலை யாகும். (அ௦)

## ௧௨.—இணைமணிமாலை.

௨௫௦ இணைமணி மாலை தனிவிலந் தாதியாய்
மறையவர் பாவும் வணிகர்தம் பாவின்
முறையு மியைந்நீ ரைம்பது வருமே. (அ௧)

௨௫௧ வெண்பாக் கலித்துறை யிரண்டு மியைந்த
வொண்பா நூறவை யிணைமணி மாலை.* (அ௨)

## ௧௩.—இரட்டைமணிமாலை.

௨௫௨ வெண்பா முதலாக் கலித்துறை பின்வரு
மிந்த விருப திரட்டைமணி மாலை. (அ௩)

௨௫௩ ஆதியந்தம் வெண்பாக் கலித்துறை
யேதமின்றி வருவ திரட்டைமணி மாலை
யதுவே நாலந் தியலு மென்ப. (அ௪)

## ௧௪.—மும்மணிமாலை.

௨௫௪ விருத்தவெள்ளை கலித்துறையகவல்
விருத்த மும்மணி விளம்புமந் தாதி.† (அ௫)

## ௧௫.—நான்மணிமாலை.

௨௫௫ வெண்பாக் கலித்துறை யகவல் விருத்த
நண்பாய் வருவது நான்மணி மாலை. (அ௬)

௨௫௬ ‡அகவலு மகவல் விருத்தமு நாற்ப
தகவலே முன்வைத் திறைவது கடனே. (அ௭)

௨௫௭ வெள்ளை கலித்துறை யகவல் விருத்தங்
கொள்வது நான்மணி ¶கோத்தவந் தாதி. (அ௮)

---

* வெண்பாவகவலிணை மணிமாலையுங் கொள்வர் இலக்கணவிளக்கப்பாட்டியலார்.

† 'மாலையந்தாதி' பி-ம்.

‡ இதற்கு அளவு முப்பது.

¶ வெண்பாக் கலித்துறை விருத்தம் அகவல் எனத்தொடுப்பர் பிற்காலத்தார்.

### ௧௬.—கலம்பகமாலை.

௨௫௮ ஒருபோ குடனம் மனைநனி நீக்கி
வெள்ளை முதலா வெல்லா வுறுப்புந்
தள்ளா வியலது கலம்பக மாலை. (௮௯)

௨௫௯ ஒருபோ கம்மனை யொழித்துவெண் பாமுதற்
கருதிய பெயரது கலம்பக மாலை. (௯0)

### ௧௭—மும்மணிக்கோவை.

௨௬0 வெள்ளையு மகவலு நேரிசை யாகக்
கலித்துறை வரவந் தாதி யாகி
முறைமையி னியல்வது மும்மணிக் கோவை. (௯௧)

௨௬௧ தோன்றிய வகவல் வெள்ளை கலித்துறை
மூன்றும் வருவது மும்மணிக் கோவை.* (௯௨)

௨௬௨ மும்மூன் றொருபொருண் மிசைவரு மென்ப. (௯௩)

### ௧௮—கலியந்தாதி.

௨௬௩ வல்லின மெல்லின மிடையின வெழுத்துப்
புல்லி மருங்கு போகா தொன்றிக்
குறிலெனிற் குறிலே நெடிலெனி னெடிலே
பொருந்தி நாற்கலை கொண்டோ ரடியாய்த்
திருந்து மிவ்வகை நான்கடி யாகியு
மோரொலி யாகியு மெண்ணென் காகிய
கலையொடு பொருந்தியுங் குறிலு நெடிலு
முறைமுதல் வரினு மவ்வெழுத் தாகியு
மிப்பரி சியன்ற முப்பது கட்டளை
மிக்கது கலியந் தாதி யாகும். (௯௪)

௨௬௪ வெண்கலி யுஞ்சில சிறுபான்மை வருமே. (௯௫)

### ௧௯.—ஒலியந்தாதி.

௨௬௫ தத்த மினத்தி லொப்புமுறை பிறழாது

---

* இதற்கும் அளவு முப்பது. இஃது ஆசிரியம் வெண்பாக் கலித்துறை யாகவருமெனவும், மும்மணிமாலை வெண்பாக் கலித்துறை ஆசிரியவிருத்த மாக வருமெனவுங் கொள்க.

நாலடி யிரெண் கலையொரு முப்பது
கோலிய தொலியந் தாதி யாகும். (௯௬)

௨௯௭ ஈரொலி யாகிய வெண்ணான்கு கலையெனச்
சீரியற் புலவர் செப்பினர் கொளலே. (௯௭)

௨௯௮ வன்னாக மென்ப தொலியெனப் படுமே. (௯௮)

## ௨௰—யானைத் தொழில்.

௨௯௯ ஏழ்வகை நிலனு மேழ்வகை நிறைவும்
பல்வகைத் தேயமு மெழுவகை யுறுப்பு
யங்கமும் வருணமும் யாண்டு மைவகைக்
கொலையு மிருவகை நடையு மைவகை
யுணர்வு முடையோர்ப் பேணலு முளப்பட
நன்னிய வேளாண் பாவி னலம்பெற
வெண்ணி யுரைப்ப தியானைத் தொழிலே. (௯௯)

௩௦௦ கிரிசரம் வனசர நதிசர மென்னிலை
நிலைபெறு நிலனென நிறுத்திசி னோரே. (௧௦௦)

௩௦௧ உயரமு நீளமுஞ் சுற்று மளவினிற்
குறையா தியல்வது நிறைவெனப் படுமே. (௧௦௧)

௩௦௨ பல்வகைத் தோங் கொல்களிறு பிறக்கும்
பல்வகைத் தேயமு மென்மனார் புலவர். (௧௦௨)

௩௦௩ பாத நாலுங் கையும்வா லதியுங்
கோசமு நிலனுறத் தீண்டுதல் குறியே. (௧௦௩)

௩௦௪ குலமெனப் படுவது பல்வகை வருணமு
நலனுற வுரைக்கு நலத்த தென்ப. (௧௦௪)

௩௦௫ நலமிகு வாழ்நாள் பொலிவுற வியம்புதல்
யாண்டென மொழிப வியனெறிப் புலவர். (௧௦௫)

௩௦௬ கையுமுற் கூறுங் கடியபிற் கூறுங்
கூர்ங்கோ டிரண்டுங் கொலைத்தொகை வகையே. (௧௦௬)

௩௦௭ முன்ன ரூன்றிய காற்குறி தன்னிற்
பின்னர்ப்பத மிடுவது தோரண மென்ப. (௧௦௭)

உ௭௭ பிறழ விடுவது வக்கிர மதுவே
சாரிகை விகற்பமு மாகு மென்ப. (௧0௮)

உ௭௮ நன்மை யியற்றலுந் தீமை யியற்றலும்
பற்றிய நன்மை தீமை நினைத்தலுங்
கயக்கறு கால நினைத்தலும் புலனே. (௧0௯)

உ௭௯ வழுவா துடையோ ரேவ லியற்ற
லுடையோர்ப் பேண லென்மனார் புலவர். (௧௧0)

மேல் நண்ணிய என்றதனாலாசிரியவடியாற் பாடுவாருமுளர்.

உ௮0 அகவலு முரித்தென வறைகுந ருளரே. (௧௧௧)

உ௧—வருக்கமாலை.

உ௮௧ மொழிக்குமுத லாகிய வெழுத்துக் கெல்லாம்
வருக்க முரைப்பது வருக்க மாலை. (௧௧உ)

உஉ—நாமமாலை, புகழ்ச்சிமாலை.

உ௮உ. * மைந்தர்க் காயின் வஞ்சிப் பல்வகை
நேர்ந்தவடி †மயக்க நாம மாலை. (௧௧௩)

உ௮௩ ஆடவர் திறத்து வஞ்சி யின்னெறி
நாடிய பாத மயங்க வைப்பி
னாம மாலை மற்றது மடந்தையர்க்
காமெனிற் புகழ்ச்சி மாலை யாகும். (௧௧௪)

உ௮௪ அதுவே-செங்கலை வண்ணப் பாவு மியங்கும் ;
கோவூர் கிழார். (௧௧௫)

உ௮௫ வெள்ளடி யியலாற் புணர்ப்போர் குறிப்பிற்
றுள்ளா வியல்பது புகழ்ச்சி மாலை ;
சேந்தம்பூதனார். (௧௧௬)

உ௩—இன்னிசைத் தொகை.

உ௮௬ தொண்ணூ றேனு மெழுப தேனு
மின்னிசை தொடுப்பி னின்னிசைத் தொகையே. (௧௧௭)

---

* 'மாந்தர்க்' பி-ம்.

† 'மடக்கு' பி-ம்.

உ௲எ எண்ணிய வகையா னின்னிசை வெண்பாத்
தொண்ணூ றெழுபது தொடுப்பதத் தொகையே;
கோவூர் கிழார். (கககஅ)

உச.—விருத்தவகை.*

உ௲அ பரிசிலை யானை †வாள்குடை வேல்செங்
கோலொடு நாடூ ருறுப்பி னகவல்
விருத்தம் பத்தென வேண்டினர் புலவர். (கககூ)

உரு—ஐம்படைவிருத்தம்.

உ௲கூ சக்கரந் தனுவாள் சங்கொடு தண்டிவை
யைம்படை யகவல் விருத்த மாகும். (கஉ0)

உகூ—நாழிகைக்கவி.

ககூ0 ஈரிரண் டியாமத் தியன்ற நாழிகைச்
சீர்திகழ் வெண்பாப் பாடுநர் யாவரு
மிருநான் கேழே ழிருநான் காமெனத்
தன்னன் முப்பது மெண்ணின ரினிதே. (கஉக)

உகூக மன்னர் கடவுளர் முன்னிலை யாக
வன்ன கடிகை யென்னு மியல்பிற்
றெருகுநெறி யன்னவை நேரிசை வெண்பா.

முதல்யாமம் எழளவும் பாடி எட்டாவதில்யாமம்ஒன்றென்றும் இரண்டாம்யாமம் ஆறளவும்பாடி எழில் யாமம்இரண்டென்றும் மூன்றாம்யாமம் ஆறளவும்பாடி எழில் யாமம்மூன்றென்றும் நான்காம்யாமம் எழளவும்பாடி எட்டில் யாமம்நான்கென்றும் பாடின் முப்பது வெண்பாவாம். (கஉஉ)

உஎ—நவமணிமாலை.

உகூஉ பாவே யினமே யென்றிவை யிரண்டு
மேவிய வகையது நவமணி மாலை. (கஉ௩)

உஅ—கைக்கிளைமாலை.

உகூ௩ ‡இரங்க வருவது மயங்கிய வொருதலை
யியைந்த நெறியது கைக்கிளை மாலை. (கஉச)

---

* பரி முதலியவற்றைப் பத்துப்பத்தாகக் கூறும் ஒன்பதுவகை விருத்தமும் அவ்வப்பெயரான் விளங்குமென்றுணர்க.

† 'வாளொடு வேறோ' பி-ம்.

‡ 'இயங்க' பி-ம்.

உ௯௪ தாயர் சேரிய ராயர் நீங்குழ
றென்றல் சேமணி யன்றி றிங்கள்
வேலை வீணை மாலை கங்குல்
காம னைங்கணை கண்வளர் கனவென
வெஞ்சிய நன்னிற வேனில் குயிலே
கொஞ்சிய கிள்ளை கொய்தளிர்ச் சேக்கை
பயிறரு நன்னலம் பாங்கர் பாங்கிய
ரியன்ற பருவர லென்மனார் புலவர். (௧௨௫)

உ௯௫ முல்லை யசோகு மாந்தளிர் தாமரை
யல்லி நீல மைங்கணை யாகும். (௧௨௬)

மயங்கிய என்றதனுல் ஊரினப்படுத்திப்பாடுவாருமுளர். பாடும்பொழுது மருட்பாவாற்பாடப்படும்: அல்லாதவழி ஆசிரியமும் வஞ்சியுமொழிய அல்லாத பாவானும் இனத்தானும் பாடப்படும். சிறுபான்மை ஆசிரியப்பாவானு மினத்தானும் பாடப்படும் எனக் கொள்க.

## ௨௯—அரிபிறப்பு.

உ௯௬ சேலே யாமை யேனஞ் சிங்கங்
கோல வாமனன் மூவகை யிராமர்
கரியவன் கற்கி யெனவரு கடவுளர்
புரிதரு தோற்றந் தெரிதரப் பராஅய்ப்
பாட்டுடைத் தலைவனைக் காக்க வேண்டி
யினமொழி நாட்டி யகவல் விருத்த
மொருப தியற்றுத லரியோன் பிறப்பே. (௧௨௭)

## ௩0—அட்டமங்கலம்.

உ௯௭ ஒருவனைக் காக்கவென் றிறைவனை யேத்திய
வெண்வகை யகவல் விருத்தம் புணர்த்த
னண்ணிய வட்ட மங்கல மென்ப. (௧௨௮)

உ௯௮ இறைவனை யேத்திய வெண்வகை மங்கல
மறிதரும் பாவே யகவல் விருத்தம்;

சேந்தம்பூதனர். (௧௨௯)

௯௪—இல்லறவெள்ளை.

உ௯௯ கலிதரு வண்ணமும் வெள்ளையு மொன்பா
னிலைபெறப் புணர்ப்பினஃ தில்லற வெள்ளை. (௧௯௦)

இதனுட் கலிதருவண்ணம் என்றதனால் வெண்கலிப்பா ஒன்றானும் பாடுவாருமுளர். நிலைபெற என்றதனாற் சந்தவகை யொன்பதும் வெண்பா ஒன்பதுமாகப் பாடுவாருமுளர்.

௯௫—மங்கலவெள்ளை.

௩௦௦ சந்தமும் வெள்ளையுந் தருவன கற்புடை
மங்கல வெள்ளை வருவன வொன்பான். (௧௯௧)

௩௦௧ அதுவே, வெண்கலி தானும் வருதற்கு முரித்தே.
மாபூதனார். (௧௯௨)

௩௦௨ சந்தமும் வெள்ளையுந் தனித்தனி புணர்த்தனு
மந்தமில் புலவ ராமென மொழிப;
சீத்தலையார். (௧௯௩)

௯௬—தாரகைமாலை.

௩௦௩ இரண்டு பொருள்புண ரிருபத் தெழுவகைச்
சீரிய பாட்டே தாரகை மாலை. (௧௯௪)

௯௭—செந்தமிழ்மாலை.

௩௦௪ எப்பொரு ளேனு மிருபத் தெழுவகை
செப்பிய †நெறியது செந்தமிழ் மாலை. (௧௯௫)

பாவானும் இனத்தானும் பாடுவாரு முளர். நான்கு முதற்பாவானாதல் ஒருபாவி னினத்தானாதல் பாடுக என்பாருமுளர்.

௯௮—தாண்டகம்.

௩௦௫ மூவிரண் டேனு மிருநான் கேனுஞ்
சீர்வகை நாட்டிச் செய்யுளி னடைவர்
கடவுளர்ப் புகழ்வன தாண்டக மவற்று
ளறுசீர் குறியது நெடியதெண் சீராம். (௧௯௬)

௩௦௬ அறுசீ ரெண்சீ ரடிநான் கொத்தங்
கிறுவது தாண்டக மிருமுச் சீரடி
குறியது நெடிய திருநாற் சீரே;
பல்காயனார். (௧௯௭)

* 'வகையது' பி-ம்.

௯0எ மங்கல மரபின் மானிடர் கடவுளர்
தம்புக ழுரைப்பது தாண்டக வகையே. (க௯அ)

௯0அ தாண்டக மானிடர் கடவுளர்க் குரித்தே;
மாபூதனார். (க௯௯)

௯0௯ அடிவரை நான்கும் வருமெழுத் தெண்ணி
நேரடி வருவது தாண்டக *மாகும்.
சீத்தலையார். (க௪0)

௯௬—பதிகம்.

௯க0 ஆசிரி யத்துறை யதனது விருத்தங்
கலியின் விருத்த மவற்றி னொன்கடி
வெட்டின் காறு முயர்ந்த வெண்பா
மிசைவைத் திரைந்து நாலந் தென்னப்
பாட்டுவரத் தொடுப்பது பதிக மாகும். (க௪க)

௯எ—சீர்மெய்க்கீர்த்தி.

௯கக சீர்நான் காதி யிரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புக ழெல்லாஞ் சொல்லியு
மந்தத் தவன்வர லாறு சொல்லியு
மவளுடன் வாழ்கெனச் சொல்லியு மற்றவ
னியற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பட வுரைப்பது சீர்மெய்க் கீர்த்தி. (க௪௨)

௯க௨ நிலைபெறு சீர்மெய்க் கீர்த்தியி னந்த
முறையாய் முடியு மெனவுரைத் தனரே;
கோவூர்கிழார். (க௪௩)

௯அ—செருக்களவழி.

௯க௩ தலைவன் செய்த நிலைபெறு புகழ்புனை
நேரிசை வெண்பா வின்னிசை வெண்பாப்
பஃறொடை வெண்பா மறக்கள வழியே. (க௪௪)

௯க௪ நேரிசை யின்னிசை பஃறொடை வெண்பா
போரினக் களவழி புகலப் படுமே. (க௪௫)

---

* 'மென்ப' பி-ம்.

### ௩௯.—மறக்களவஞ்சி.

௯௧௫ குறள்சிந் தளவடி யகவ லடிவிராஅய்
வஞ்சிச் செய்யுளின் மன்னவர் மறக்கள
மெஞ்சா துரைப்பது மறக்கள வஞ்சி. (௧௪௬)

௯௧௬ இயங்குபடை மன்ன ரிகற்களம் புகழ்ந்த
மயங்கியல் வஞ்சி மறக்கள வஞ்சி. (௧௪௭)

### ௪௦.—செருக்களவஞ்சி.

௯௧௭ விருத்தவகை பத்தான் விளம்பு மதனைச்
செருக்கள மெனவே செப்பினர் புலவர். (௧௪௮)

### ௪௧.—ஆற்றுப்படை.

௯௧௮ புரவலன் பரிசில் கொண்டு மீண்ட
விரவலன் வெயிறெறு மிருங்கா னத்திடை
வறுமை யுடன்வரூஉம் புலவர் பாணர்
பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டப்
புரவல னூர்பெயர் கொடை பராஅ
யாங்குநீ செல்கென விடுப்பதாற் றுப்படை. (௧௪௯)

௯௧௯ ஓங்கிய வறுதா னகவலின் வருமே. (௧௫௦)

௯௨௦ புலவராற் றுப்படை புத்தேட்கு முரித்தே, (௧௫௧)

### ௪௨.—கண்படைநிலை.

௯௨௧ காலைபகன் மாலை யாழ்முறை யறத்திய
லமைச்சிய லரசிய லேனை யியலிசை
நாட கத்திய லோடு *நான்மறை
முறையே யெய்தினை யூழி வாழி
யினிய மகளிரோ டின்பத்துயில் கொள்கென்
†றிங்ஙன முரைப்பது கண்படை யாகும். (௧௫௨)

### ௪௩.—துயிலெடைநிலை.

௯௨௨ கண்படை மன்னவர் முன்னர்த் தண்பத
விடிய லெல்லை யியல்புறச் சொல்லித்

---

* 'நான்கு, முறைமுறை யெய்தினை' பி-ம்.
† 'றின்ன' பி-ம்.

தந்த திறையருந் தாராத் திறையரு
*மேத்தி நின்மொழி கேட்டினி தியங்க
வேண்டின ரித்துயி லெழுகென விளம்பி
னதுவே மன்னவர் துயிலெடை நிலையே. (௧௩௩)

௪௪.—விளக்குநிலை.

௩௨௩ துளக்கமின் மன்னர்க் காம்விளக் குரைப்பது
விளக்கு நிலையென வேண்டினர் புலவர். (௧௩௪)

௪௫.—கடாநிலை.

௩௨௪ கொற்றவை தனக்குக் கொற்றவ ரெறியுங்
கடாநிலை புரைப்பது கடாநிலை யாகும். (௧௩௫)

௩௨௫ வடாஅதுறை கன்னிக்கு மன்னவ ரெறிந்த
கடாநிலை புரைப்பது கடாநிலை யாகும்:

பெருங்குன்றூர்க்கிழார். (௧௩௬)

௪௬—யாண்டுநிலை.

௩௨௬ வையக மன்னவன் †மன்னுக பல்யாண்
டெய்துக வென்ப தியாண்டுநிலை யாகும். (௧௩௭)

இது பெரும்பான்மை நேரிசை வெண்பாவாற் பாடப்பெறும். சிறு பான்மை எல்லாப்பாவானும் பாடப்பெறும்,

௪௭.—பறைநிலை.

௩௨௭ காவல ரினிதுறத் தேவர்காத் தளிக்கெனக்
கடவுளர் விழவினுங் கதிர்முடி விழவினு
நாடு நகரமு நலம்பெற வியம்பி
வருநெறி வஞ்சி வழங்கப் பற்றிய
மொழிவரத் தொடுப்பது பறைநிலை யாகும். (௧௩௮)

௪௮.—அந்தாதித்தொகை.

௩௨௮ வெண்பாக் கலித்துறை வேண்டிய பொருளிற்
பண்பா யுரைப்பதந் தாதித் தொகையே. (௧௩௯)

---

*'மேத்திநின் மொழிகேட் டினிதியங்க வேண்டின, ரித்துயி லெழு கென வியம்பி னதுவே, மன்னவ ரின்பத் துயிலெடை நிலையே.' பி-ம்.

† 'மன்னிய பல்யாண், டெய்துவ னென்பது' பி-ம்.

௪௮.—மருட்பா.

௩௨௯ புறநிலை வாயுறை செவியறி வுறாஉவெனத்
திறமையின் மருட்பாச் செய்யுளின் வருமே. (௧௯0)

௪௯.—பாதாதி.

௩௩0 அகவடி யுகிரே விரல்புற வடியே
பரடே கழலே கணைத்தாண் முழந்தாள்
குறங்கே யல்குல் கொப்பூழ் வயிரதன்
வரையே யிடையே மயிரி னொழுக்கே
முலையுகிர் விரலே முன்கை யகங்கை
தோளிணை கழுத்தே முகநகை செவ்வாய்
மூக்கே கண்ணே காது புருவ
நுதலெனு மாறைந் துறுப்புட னிரண்டும்
பாத மாதியா வேண்டுதல் புணர்ப்பினஃ
தோதிய பாத மாதியா மென்ப. (௧௯௧)

௫0.—பணைமுலைநயனம்.

௩௩௧ பணைமுலை நயனம் பாங்கா மகவல்
விருத்தம் பத்தென விளம்பினர் புலவர். (௧௯௨)

௩௩௨ ஆகிய கன்முலை யகவல் விருத்தம்:
பெருங்குன்றூர்க்கிழார். (௧௯௩)

௫௧.—உழத்திப்பாட்டு.

௩௩௩ புரவலற் கூறி யவன்வா ழியவென்
றகல்வயற் றொழிலை யொருமை யுணர்ந்தன
னெனவரு மீரைந் துழத்திப் பாட்டே. (௧௯௪)

௫௨.—குறத்திப்பாட்டு.

௩௩௪ இறப்பு நிகழ்வெதிர் வென்னுமுக் காலமுந்
திறப்பட வுரைப்பது குறத்திப் பாட்டே. (௧௯௫)

௩௩௫ குறத்திப் பாட்டு மதனோ ரற்றே. (௧௯௬)

௫௩.—ஒருபாவொருபஃது.

௩௩௬ வெள்ளை யாத லகவ லாத
றள்ளா வொருப தொருபா வொருபஃது. (௧௯௭)

### ௫௪.—இருபாவிருபஃது.

௩௩௭ வெள்ளை யகவல் பின்னர் முறைவைத்
தெள்ளா தியல்வ திருபா விருபஃது. (௧௬௮)

௩௩௮ ஒருபா வொருபஃது மிருபா விருபஃதுங்
கருதிய வெள்ளையு மகவலுங் காட்டினர். (௧௬௯)

### ௫௫.—கோவை.

௩௩௯ கோவை யென்பது கூறுங் காலை
மேவிய களவு கற்பெனுங் கிளவி
யைந்திணை திரியா வகைப்பொரு டழீஇ
முந்திய கலித்துறை நானூ றென்ப. (௧௭௦)

௩௪௦ களவினுங் கற்பினுங் கிளவி வகையாற்
றிணைநிலை திரியாச் செய்யைத் தாகி
நாட்டிய கலித்துறை நானூ றுரைப்பது
கோட்ட மில்லாக் கோவை யாகும். (௧௭௧)

௩௪௧ ஐந்திணை தழுவிய வகைநிலைக் கோவை
தந்தநா னூறுந் தாங்கலித் துறையே. (௧௭௨)

### ௫௬.—கணக்கு. (மேற்கணக்கு—கீழ்க்கணக்கு.)

௩௪௨ மேல்கீழ்க் கணக்கென *விருவகைக் கணக்கே. (௧௭௩)

௩௪௩ மேற்கணக் கெனவுங் கீழ்க்கணக் கெனவும்
பாற்படும் வகையாற் பகர்ந்தனர் கொளலே. (௧௭௪)

௩௪௪ அகவலுங் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறு
மிகுத்துடன் றொகுப்பன மேற்கணக் கெனவும்
வெள்ளைத் தொகையு மவ்வகை யெண்பெறி
னெள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே. (௧௭௫)

௩௪௫ ஐம்பது முதலா வைந்நூ றீறு
வைவகைப் பாவும் பொருணெறி மரபிற்
றொகுக்கப் படுவது மேற்கணக் காகும். (௧௭௬)

---

* 'விதித்தனர் புலவர்' பி-ம்.

௩௫௪ பரிசினீட் டித்த லஞ்சி வெறுத்தோர்
கடைநின் றுரைப்பது கடைநிலை யென்ப. (கஅ௫)

கடையெனினும் அங்கதமெனினு மொக்கும்.

௩௫௫ வலங்கெழு வேந்தர் வான்புகக் கவிஞர்
கலங்கித் தொடுப்பது கையறு நிலையே. (கஅ௬)

௩௫௬ வெற்றி வேந்தன் விண்ணக மடைந்தபின்
கற்றோ ருரைப்பது கையறு நிலையே. (கஅ௭)

௩௫௭ கலியே வஞ்சியிற் கையற வுரையார். (கஅஅ)

௩௫௮ மற்றவை வல்ல வினம்பிறி தொன றினு
மத்தகு மரபி னடக்கினர் கொளலே. (கஅ௯)

இனவியல் முற்றும்.

பன்னிருபாட்டியல் முற்றிற்று.

